# காட்சி – 1



இடம் : இந்திரனின் அவை

நேரம் : மாலை

உறுப்பினர்கள் : இந்திரன், விசுவாமித்திரர், வசிஷ்டர், நடன மாதர்கள்

**இந்திரன்** : இன்று நம் அவையில் சிறப்பம்சம் விசுவாமித்திரர் வசிஷ்டர் இருமா முனிவர்களின் வருகை.

**விசுவாமித்திரர்:** இந்திரனுக்கு என் ஆசிகள்.

**வசிஷ்டர்** : இந்திரா... உன்னைக் கண்டு வெகு நாட்கள் ஆகிறதே என்று வந்தேன்.

**இந்திரன்** : நன்றி மாமுனிவர்களே... இன்று உங்களை மகிழ்விக்க நடனம் ஒன்றை ஏற்பாடுச் செய்து இருக்கிறேன். கண்டு மகிழுங்கள். யாரங்கே... நடனம் ஆரம்பம் ஆகட்டும்.

(நடனம் நடந்து முடிதல்)

**விசுவாமித்திரர்:** நடனம் மிகவும் அபாரம். பூலோகத்திலே இப்படிப்பட்ட நடனத்தைக் காணக் கிடைப்பதில்லை.

**இந்திரன்** : மாமுனிகளே... பூலோகத்தில் மக்கள் எப்படி இருக்கிறார்கள். அனைவரும் சுகம் தானே!

**விசுவாமித்திரர்:** எல்லோரும் சுகம் தான். தனக்குச் சுகம் கிடைக்க வேண்டுமென்றால் எதையும் செய்வார்கள்.

**வசிஷ்டர்** : இந்திரா... விசுவாமித்திரரின் கூற்றை நான் முழுமையாக ஏற்றுக் கொள்ள மாட்டேன்.

**இந்திரன்** : ஏன் விசிஷ்ட மாமுனியே?

**வசிஷ்டர்** : மக்கள் தங்கள் சுகத்தைப் பற்றி எண்ணுவது உண்மை. ஆனால், அதற்காக எதையும் செய்வார்கள் என்பதை ஏற்றுக்கொள்ள முடியாது.

**விசுவாமித்திரர்:** சுயநலவாதிகளே பூலோகவாசிகள்.

**இந்திரன்** : அப்படியென்றால் உண்மை வழி நடப்பவர் கிடையாதா?

**விசுவாமித்திரர்:** கிடையாது.

**வசிஷ்டர்** : இந்திரா... விசுவாமித்திரருக்கு உண்மை வழி நடப்பவர்களைத் தெரியாது போலும்.

**விசுவாமித்திரர்:** உண்மை வழி நடப்பவர் ஒருவரையாவதுச் சொல்லுங்கள் பார்ப்போம்.

**வசிஷ்டர்** : ஹரிச்சந்திரன், உண்மைக்காகவே பிறந்தவன்.

**விசுவாமித்திரர்:** சொன்னச் சொல் தவறிய அரசனா உண்மை வழி நடப்பவன்? வருணனின் சாபத்திற்கு உள்ளாகிக் கொடிய நோயைப் பெற்றவனா உண்மையானவன்?

**வசிஷ்டர்** : ஹரிச்சந்திரனின் கடந்தக் கால வாழ்க்கை அது. இன்று, நிகழ்காலத்திலே, அவனைப் போன்ற உண்மையானவன் கிடைப்பது அரிது, பொய் பேசாதவன்.

**விசுவாமித்திரர்:** ஹரிச்சந்திரனைப் பொய் பேச வைத்து விட்டால்...

**வசிஷ்டர்** : அது நடக்காது. அப்படி அவன் பொய் பேசினால் நான் என்னுடைய தலையை முடியாமல், அரக்கர்களைப் போல் மனித மாமிசம் சாப்பிட்டு, எங்காவதுக் சென்று விடுகிறேன்.

**இந்திரன்** : வசிஷ்ட மாமுனியே... இதென்ன சபதம்? இது உங்களுக்கு ஹரிச்சந்திரனிடம் உள்ள நம்பிக்கையைக் காட்டுகிறது. விசுவாமித்திர முனியே... உங்கள் பக்கம் தோல்வி ஏற்பட்டால் என்ன செய்வது?

**விசுவாமித்திரர்:** இந்திரா... என் தவத்தால் நான் பெற்றப் புண்ணியத்தில் பாதியை ஹரிச்சந்திரனுக்குக் கொடுத்து விடுகிறேன். அவனை உலக மக்கள் என்றென்றும் போற்றும் நிலையைப் பெறச் செய்கிறேன்.

**இந்திரன்** : பாவம் ஹரிச்சந்திரன்... உங்களது இந்தப் போட்டியால் அவன் என்ன பாடுபடப் போகிறானோ... தெரியவில்லை. உண்மையை எதிர்த்து யுத்தம் ஆரம்பமாகிறது. முடிவு என்ன என்பதைப் பொறுத்திருந்துப் பார்ப்போம்.

**வசிஷ்டர்** : இந்திரா... ஹரிச்சந்திரனின் தன்மை புரியாமல் விசுவாமித்திரர் பேசுகிறார். உண்மையின் சக்தியை அவர் விரைவில் தெரிந்துக் கொள்வார் வருகிறேன்.

(வசிஷ்டர் செல்லுதல்)

**விசுவாமித்திரர்:** (ஒளி வட்டத்திற்குள்... தனக்குள்ளே) விரைவிலேயே ஹரிச்சந்திரனைப் பொய் பேச வைக்கிறேன்! நீர் சொன்னதுப் போல், தலையை முடியாமல் அரக்கர்களைப் போல் உம்மை அலைய வைக்கிறேன்! மனித மாமிசமும் சாப்பிட வைக்கிறேன்! அஹ்றஹஹ்ஹ்ஹா...!

– காட்சி முடிவு –

# காட்சி 2



**இடம் : ஹரிச்சந்தினின் அரண்மனை**

**நேரம் : மாலை**

**உறுப்பினர்கள் : ஹரிச்சந்திரன், மந்திரி**

(மந்திரி அரசனைக் காண வருதல்)

**மந்திரி** : (பதட்டத்துடன்) அரசே... நான் கேள்விப்பட்டச் செய்தி உண்மையா?

**ஹரிச்சந்திரன் :** என்ன மந்திரியாரே... எந்தச் செய்தியைப் பற்றிக் கேட்கிறீர்கள்?

**மந்திரி** : தாங்கள் இந்த நாட்டுக்கு வாரிசைப் பெற ஒரு மண்டலம் உண்ணா நோன்பு இருக்கப் போகிறீர்களாமே!

**ஹரிச்சந்திரன் :** ஆம். நம் நாட்டுக்கு வாரிசு வேண்டுமே... அதற்காகத் தான்.

**மந்திரி** : அரசே... நாட்டுக்கு வாரிசு அவசியம் வேண்டும். நீங்களும் எல்லாக் கடவுள்களையும் வேண்டிப் பூஜைகள் செய்துவிட்டீர்கள். போதியத் தான தர்மங்களும் செய்துத் தான் வருகிறீர்கள். இருந்தும் உங்களுக்குக் குழந்தை வரம் கிடைக்கவில்லை. அதனால் உண்ணா நோன்பு இருக்க

வேண்டிய அவசியம் என்ன? வாரிசு வேண்டும் என்ற ஆசையில் உங்கள் உயிரையல்லவாப் பணையம் வைக்கிறீர்கள்.

**ஹரிச்சந்திரன் :** (வருத்தத்துடன்) நாட்டிற்கு ஒரு இளவசரனைத் தர முடியாத நான் இருந்தென்ன பயன்?

**மந்திரி :** ஏன் அப்படி எண்ணுகிறீர்கள் அரசே... இன்னும் பூஜை புனஸ்காரங்களை அதிகம் செய்யுங்கள். மக்களுக்கு அதிகமானத் தான, தர்மங்களைச் செய்யுங்கள். இறைவன் மனமிரங்குவார்.

**ஹரிச்சந்திரன் :** தங்களைப் போன்ற மதியூகி மந்திரி இருப்பதால் எனக்கு வேறு கவலையில்லை. என் நோன்பை நாளையே ஆரம்பிக்கப் போகிறேன். நாட்டு நடப்புகளை நீங்கள் தான் சரிவரக் கவனித்துக் கொள்ள வேண்டும்!

**மந்திரி :** அரசே...இன்னும் சற்று யோசியுங்கள். நோன்பு இருப்பது அவசியமா?

**ஹரிச்சந்திரன் :** மந்திரியாரே... என் முடிவை மாற்ற எண்ணாதீர்கள் என் துணைவி சந்திரமதி கலங்குவதையும் நாட்டுக்கு வாரிசு இல்லையே என்று மக்கள் எண்ணுவதையும் என்னால் இனி மேல் தாங்க முடியாது. என் இந்த நோன்பாவது, எனக்கு வாரிசைத் தருமா என்று பார்க்க விரும்புகிறேன்.

**மந்திரி :** அரசே... நான் மந்திரியாக இருந்து சொல்ல வேண்டியதைச் சொல்லி விட்டேன். இனி மேல் தங்கள் விருப்பம். நாளையிலிருந்து நான் என்ன செய்ய வேண்டும் என்பதைச் சொல்லுங்கள்?

**ஹரிச்சந்திரன் :** மந்திரியாரே... ஒரு மண்டலம், 48 நாட்கள் நான் செய்ய வேண்டிய அரசியல் வேலைகள் அனைத்தையும் நீங்கள் பொறுப்பாகக் கவனிக்க வேண்டும். நம் நாட்டுக் கோயில்கள் அனைத்திலும் தினம் பூஜைகள் தவறாமல் நடக்கட்டும்.

**மந்திரி :** ஆகட்டும் அரசே... தங்களது ஆணைகள் அனைத்தும் நிறைவேற்றப்படும். உங்களுக்கு வாரிசு கிடைக்க என்னுடைய வேண்டுதலும் தினம் இருக்கும். நாட்டைப் பற்றியக் கவலையை விடுத்து, நோன்பைச் செய்யுங்கள்.

**ஹரிச்சந்திரன் :** நல்லது மந்திரியாரே... இந்த விஷயத்தைக் கேட்டு மக்கள் கலங்காமல் இருக்கும்படி பார்த்துக் கொள்ளுங்கள்.

**மந்திரி :** அரசே... உங்கள் நோன்பு வெற்றியடைய என் வாழ்த்துக்கள். கவலைப்படாதீர்கள். இப்போதிலிருந்தே என் வேலைகளை ஆரம்பிக்கிறேன். வருகிறேன். அரசே....

(மந்திரி செல்லுதல்)

**ஹரிச்சந்திரன் :** இறைவா ! வாழையடி வாழையாக என் வம்சம் தழைக்க ஒரு வாரிசை வழங்க வேண்டும் ! அதற்காக நாளையிலிருந்து என் புனித நோன்பைத் தொடங்குகிறேன் !

– காட்சி முடிவு –

# காட்சி – 3

**இடம் : ஹரிச்சந்திரனின் அரண்மனை**

**நேரம் : மாலை**

**உறுப்பினர்கள் : சந்திரமதி, மந்திரி, ஹரிச்சந்திரன், வருண பகவான்**

(சந்திரமதி வருத்தத்துடன் அமர்ந்திருத்தல், மந்திரி வருதல்)

**சந்திரமதி** : (கவலையுடன்) வாருங்கள் மந்திரியாரே... அரசர் நோன்பு ஏற்று இன்றோடு முப்பது நாட்கள் ஆகி விட்டன. அவர் எப்படி இருக்கிறார்?

**மந்திரி** : அரசியே... கவலைப்படாதீர்கள். அரசர் உடல்நிலைக்கு ஏதும் இல்லை. எதையும் சாப்பிடாமல் இருப்பதால் உடல் சற்றுத் தளர்ந்துள்ளது. அவ்வளவே.

**சந்திரமதி** : (வருத்தத்துடன்) மன்னருக்கு தான் மிகுந்த கஷ்டம். இந்த நோன்பின் காரணமாக எனக்குக் குழந்தைப் பிறந்து விட்டால் நல்லது. குழந்தைச் சில வருடங்களே வாழ்ந்தாலும் போதும்.

**மந்திரி** : அரசியே... நான் வந்த விஷயத்தைக் கேளுங்கள். வருண பகவான் அரசரின் நோன்பைக் கண்டு மனமிரங்கியுள்ளார்.

**சந்திரமதி** : என்ன நடந்தது என்று விவரமாகச் சொல்லுங்கள்.



(மேடையின் ஒரு பக்கம் மன்னரும், வருணனும் பேசுவது போன்ற அமைப்பு)

**ஹரிச்சந்திரன் :** (பணிவுடன்) வருண பகவானுக்கு வணக்கம்.

**வருணன் :** மன்னனே... உன்னுடைய இந்த உண்ணா நோன்பு மகத்தானது. மனிதனின் வாழ்க்கைக்கு அவசியமான நீரையும் அருந்தாது நீ நோன்பு இருப்பது கண்டு எனக்கு உன்னிடத்தில் இரக்கம் வந்து விட்டது. நீ எண்ணியக் காரியம் கை கூடும். என் வாழ்த்துக்கள்.

**ஹரிச்சந்திரன் :** (மகிழ்ச்சியுடன்) வருண பகவானே... அப்படியென்றால் எனக்கு மகன் பிறப்பானா?

**வருணன் :** நிச்சயம், ஆனால் ஒரேயொரு நிபந்தனை.

**ஹரிச்சந்திரன் :** (ஆச்சரியத்துடன்) நிபந்தனையா? என்ன அது?

**வருணன் :** உன் மனைவியின் விருப்பத்திற்கேற்ப, குழந்தை இல்லை என்ற அவச்சொல் வராமல் காக்க, உனக்குக் குழந்தை பிறக்கும். ஆனால் அந்தக் குழந்தையைப் பிறந்த உடனே எனக்குத் தந்து விட வேண்டும்.

**ஹரிச்சந்திரன் :** (வேதனையுடன்) பகவானே... இது என்ன நிபந்தனை. எனக்கு வாரிசு வேண்டும் என்பது உண்மை. அவன் எனக்குப் பின்னே இந்த நாட்டை ஆள்பவனாக இருக்க வேண்டும். ஆனால் தாங்களோ, குழந்தைப் பிறந்ததுமே தங்களிடம் தர வேண்டும் என்று சொல்வதுச் சரியா...?

**வருணன் :** ஹரிச்சந்திரா... நீ இருக்கும் நோன்பின் தன்மைக்காக நான் இந்த நிபந்தனையோடு தான் குழந்தை வரத்தைத் தர முடியும். பிறகு உன் விருப்பம்.

**ஹரிச்சந்திரன் :** வருண பகவானே... இந்த அளவிற்காவது நீங்கள் மனமிரங்கி வந்ததற்கு மிக்க நன்றி. உங்கள் நிபந்தனையை நான் ஏற்றுக் கொள்கிறேன்.

**வருணன் :** குழந்தைப் பிறக்க என் வாழ்த்துக்கள். என் நிபந்தனையை மட்டும் மறந்து விடாதே.

(அரசி, மந்திரி நிற்கும் இடத்தின் மேல் வெளிச்சம்)

**மந்திரி :** அரசியாரே... இது தான் நடந்தது.

**சந்திரமதி :** அரசர் நோன்பை ஏற்றது இந்த அளவிற்காவது நடந்துள்ளதே. எப்படியாவது வருண பகவானை வேண்டி, குழந்தைப் பிறந்ததும் எங்களிடமே வைத்துக் கொள்ள வழிச் செய்ய வேண்டும். என்னால் அவரை நோன்பு முடிந்ததும் தான் பார்க்க முடியும். அவரை நன்கு கவனித்துக் கொள்ளுங்கள்.

**மந்திரி :** ஆகட்டும் அரசியாரே... இன்னும் சில நாட்களே இருக்கின்றன. வரம் கிட்டிய காரணத்தால் மன்னருக்கு உடலில் கொஞ்சம் வலுக் கூடியிருக்கும்.

அதனால் அவர் உடல் இந்த நோன்பை நிச்சயம் தாங்கும். வருகிறேன். அரசியே.

(மந்திரி செல்லுதல்)

**சந்திரமதி** : (தனக்குள்) என் விஷயத்தை அரசரிடம் தெரிவிக்கும்படி மந்திரியாரிடம் தெரிவித்து இருக்கலாமா...! (சிறிது சிந்தித்து) இல்லையில்லை! அரசர் நோன்பை ஆரம்பித்த அன்றே, நானும் உண்ணா நோன்பை ஆரம்பித்து விட்டேன் என்ற விஷயம்... என்னுடனேயே இருந்துவிட்டுப் போகட்டும்!

– காட்சி முடிவு –

# காட்சி – 4



**இடம் : ஹரிச்சந்திரனின் அரண்மனை.**

**நேரம் : மாலை**

**உறுப்பினர்கள் : ஹரிச்சந்திரன், சந்திரமதி, வருண பகவான், மந்திரி**

**மந்திரி** : அரசே... தங்களைக் காண வருண பகவான் வந்திருக்கிறார்.

**ஹரிச்சந்திரன் :** வரச் சொல்லுங்கள் மந்திரியாரே... (மந்திரி செல்லுதல்) தேவி... மகனைக் கேட்க வருண பகவான் வருகிறார்.

**சந்திரமதி** : அரசே... எனக்கு என் மகன் வேண்டும். எதையாவதுச் சொல்லி என் மகனை நம்மிடமே இருக்கச் செய்யுங்கள்.

**ஹரிச்சந்திரன் :** பார்ப்போம்.

(மந்திரியும் வருண பகவானும் வருதல்)

**ஹரிச்சந்திரன் :** வாருங்கள் வருண பகவானே! உங்கள் வரவு நல்வரவு ஆகுக!

**வருணன்** : நல்லது உண்டாகட்டும் ஹரிச்சந்திரா! நான் வந்திருக்கும் காரணம் தெரியும்தானே?

**ஹரிச்சந்திரன் :** தெரியும் பகவானே… குழந்தைப் பிறந்து ஒரு வாரம் ஆகி விட்டது. அதைப் பெற வந்திருக்கிறீர்கள்.

**வருணன் :** மகனைத் தந்தால் போதும்.

**ஹரிச்சந்திரன் :** பகவானே… உங்கள் நிபந்தனையை ஏற்கிறேன். ஆனால் ஒரு வேண்டுகோள்.

**வருணன் :** என்ன அது?

**ஹரிச்சந்திரன் :** குழந்தை இப்போதுதானே பிறந்திருக்கிறான். அவனுக்குப் பல் முளைத்ததும் உங்களுக்குத் தருகிறேன்.

**வருணன் :** (கோபத்துடன்) ஹரிச்சந்திரா… என்ன இது? குழந்தைப் பிறந்ததுமே எனக்குத் தர வேண்டும் என்பது தானே நிபந்தனை.

**சந்திரமதி :** பகவானே… மன்னிக்கவும். என்னுடைய நிலையைக் கொஞ்சம் எண்ணிப் பாருங்கள். இன்னும் சில காலம் என் மகனுடன் இருக்க விரும்புகின்றேன். என் வேண்டுகோளுக்குச் செவிச் சாயுங்கள் பகவானே!

**வருணன் :** ஹரிச்சந்திரா… உன் மனைவியின் நிலைக்காக இப்போது குழந்தையை விட்டுச் செல்கிறேன். ஆனால் பல் முளைத்ததும் மகனைத் தந்து விட வேண்டும்.

**ஹரிச்சந்திரன் :** ஆகட்டும் பகவானே…!

**வருணன் :** (மிகக் கோபத்துடன்) என்ன ஆகட்டும்?

**ஹரிச்சந்திரன் :** இளவரசனுக்கு முதல் பல் முளைத்த அடுத்த நாளே வாருங்கள்! இளவரசனை நிச்சயமாகத் தங்களிடம் ஒப்படைக்கிறேன்!

**வருணன் :** நிச்சயமாக…!

**ஹரிச்சந்திரன் :** ஆம்… வருண பகவானே… சத்தியமாக!

– காட்சி முடிவு –

# காட்சி – 5

**இடம் : ஹரிச்சந்திரனின் அரண்மனை**

**நேரம் : மாலை**

**உறுப்பினர்கள் : ஹரிச்சந்திரன், மந்திரி**

**மந்திரி** : அரசே, நீங்கள் மகிழ்ச்சியுடன் இருப்பதைக் காண ஆனந்தமாக இருக்கிறது.

**ஹரிச்சந்திரன் :** என் மகன் லோகிதன் இனி மேல் என்னிடமே இருக்கப் போகிறானே... நமக்கு யுவராஜன் கிடைத்து விட்டானே...

**மந்திரி** : ஆம் அரசே... வருண பகவானிடம் தொடர்ந்துப் போராடி மகனைப் பெற்றுவிட்டீர்கள்.

**ஹரிச்சந்திரன் :** இரண்டாவது முறையாகப் பல் முளைத்ததும் வருண பகவான் வந்தார். மகனுக்கு ஒரு வயது முடியட்டும் என்றேன்! மறுபடியும், மறுபடியும் வருண பகவான் வந்தார்! வெறுங்கையுடன் திரும்பினார்! லோகிதனுக்குக் கொஞ்சம் விபரம் வந்ததுமே, விஷயம் அறிந்து நம்மை விட்டு எங்கோ சென்று விட்டான். அதன் காரணமாக எனக்குக் கடுமையான நோயை வருண பகவான் தந்தார். பின் என் வேண்டுதலுக்கு மனமிரங்கிய வருண பகவான், நோயைக் குணப்படுத்தி, மகனையும் திரும்பப் பெறச் செய்தார். எப்படியோ எனக்கு மகன் திரும்பக் கிடைத்து விட்டான்.

**மந்திரி** : எப்படியோ... சொன்னச் சொல் தவறினாலும் நமக்கு யுவராஜன் கிடைத்து விட்டான்.

**ஹரிச்சந்திரன் :** மந்திரியாரே... பொறுங்கள்! என் மகன் காரணமாக எத்தனை முறை சொன்னச் சொல்லைத் தவறியிருக்கிறேன். (கவலையுடன்) அடடா... தவறுச் செய்து விட்டேனே...

**மந்திரி** : அரசே... அதற்காக மன வருத்தம் கொள்ள வேண்டாம். நமக்கு நம் காரியம் தான் முக்கியம்.

**ஹரிச்சந்திரன் :** இருந்தாலும் மந்திரியாரே... நான் செய்தது பெருந்தவறு. மகனைப் பெற வேண்டும் என்ற ஒரே எண்ணம் என்னைச் சொன்னச் சொல் தவறிய அரசனாக ஆக்கி விட்டது. என்னைப் பற்றி மக்களும் எதிர்காலச் சந்ததியினரும் என்ன நினைப்பார்கள். என்னுடையக் குலப் பெருமை என்னால் அழிந்து விட்டதே...

(ஹரிச்சந்திரன் வருத்தப்படுதல்)

**மந்திரி** : (பதற்றத்துடன்) அரசே... மன்னித்து விடுங்கள். என்னுடைய சொற்கள் உங்களை இப்படி வருத்தப்பட வைக்கும் என்று எண்ணவில்லை.

**ஹரிச்சந்திரன் :** இல்லை மந்திரியாரே... நீங்கள் சொன்னது என்னை யோசிக்க வைத்து விட்டது. இப்போதே நான் முடிவுச் செய்கிறேன். இனிமேல் எக்காரணம் கொண்டும் சொன்னச் சொல் தவற மாட்டேன். உண்மையே பேசுவேன். 'சத்தியத்திற்கு ஹரிச்சந்திரன்' என்ற வார்த்தையை உலகம் உள்ளவரையும் நிலை நிறுத்துவேன். இது சத்தியம்! சத்தியம்!! சத்தியம்!!

– காட்சி முடிவு –

# காட்சி – 6

**இடம் : விசுவாமித்திரரின் ஆசிரமம்**

**நேரம் : மாலை**

**உறுப்பினர்கள் : விசுவாமித்திரர், அவரது சீடன் மகிழதாசன்.**

**விசுவாமித்திரர்:** மகிழ தாசா…

**மகிழதாசன் :** குருவே…

**விசுவாமித்திரர்:** ஹரிச்சந்திரன் எப்படி இருக்கிறான்? அவன் நாட்டு மக்கள் எப்படி இருக்கிறார்கள்?

**மகிழதாசன் :** குருவே… ஹரிச்சந்திரன் சத்திய விரதம் எல்லோரையும் மகிழ்ச்சியுடன் இருக்கச் செய்கிறது.

**விசுவாமித்திரர்:** அவனைப் பொய் பேச வைக்க முடியுமா?

**மகிழதாசன் :** குருவே… அது மிகவும் கடினம். அரசனுக்கு வேண்டிய அனைத்துச் சுகமும் அவருக்குக் கிடைக்கும்போது எப்படிப் பொய் பேச வைக்க முடியும்.

**விசுவாமித்திரர்:** நான் போட்டியில் வெல்ல, அவனைப் பொய் பேச வைத்தேயாக வேண்டும். அதற்கு ஏதாவது வழி இருக்கிறதா என்று யோசி.

**மகிழதாசன் :** குருவே… எனக்குத் தெரிந்து, எந்த வழியும் கிடையாது. அரசரைப் பொய் பேச வைப்பது நடக்காதக் காரியம்.

**விசுவாமித்திரர்:** மகிழா… நீ ஹரிச்சந்திரனின் பக்கமே பேசுகிறாய். என்னுடையச் சீடனாக இருந்து நான் போட்டியில் வெல்ல யோசி.

**மகிழதாசன் :** யாருக்குமே தனக்கு வேண்டியது அனைத்தும் கிடைக்கும் போது பொய் பேச வேண்டிய அவசியம் இருக்காது. அதனால்தான் அரசருக்குச் சாதகமாகப் பேசுகிறேன்.

**விசுவாமித்திரர்:** உம்ம்… எல்லாச் சுகங்களும் கிடைக்கும்போது பொய் பேச வேண்டிய அவசியமில்லை. வாழ்க்கையிலே கஷ்டம் என்று வந்தால் பொய் பேசுவார்கள் அல்லவா?

**மகிழதாசன் :** ஆம் குருவே.

**விசுவாமித்திரர்:** அப்படியென்றால் ஹரிச்சந்திரனின் அரசு, சுகம் அனைத்தையும் அவனிடமிருந்துப் பறித்துக் கொண்டால்…

**மகிழதாசன்** : நல்ல யோசனை**...** குருவே**!**

**விசுவாமித்திரர்:** மகிழா**...** நீ நாளையே ஹரிச்சந்திரனிடம் சென்று, பகு சொர்ண யாகத்தை நடத்தச் சொல்**.** யாகம் முடிந்ததும் அவனைப் பொய் கோபுரத்திலே ஏற வைக்கும் முதல் படியில் நிறுத்துகிறேன்**!**

**மகிழதாசன்** : அது எப்படிக் குருவே**?**

**விசுவாமித்திரர்:** பொறுத்திருந்துப் பார் சிஷ்யா**...!** முதலில் ஹரிச்சந்திரனை அணுகி, பகு சொர்ண யாகத்தைச் செய்வதற்குத் தூண்டி விடு**!**

**மகிழதாசன்** : அப்படித் தூண்டி விட்டால்**...!**

**விசுவாமித்திரர்:** அதில் தான் அரசனைச் சிக்க வைக்கும் தூண்டில் இருக்கிறது**...!** அஹ்ஹஹ்ஹா**...!**

– காட்சி முடிவு –

# காட்சி – 7



**இடம் : ஹரிச்சந்திரன் அவை.**

**நேரம் : மாலை**

**உறுப்பினர்கள் : ஹரிச்சந்திரன், மந்திரி, வசிஷ்டர், விசுவாமித்திரர், லோகிதன், பாடகன், தானம் பெறுபவர்கள்**

**மந்திரி** : அரசே... பகு ஸ்வர்ண யாகம் இனிதே முடிந்தது. அதைக் கொண்டாட இசை நிகழ்ச்சி ஒன்றை ஏற்பாடுச் செய்திருக்கிறோம். அதை ஆரம்பிக்கலாமா?

**ஹரிச்சந்திரன் :** மிக்க மகிழ்ச்சி மந்திரியாரே... நிகழ்ச்சித் தொடங்கட்டும்.

(பாடகன் பாடல் பாடுகிறார்)

**மந்திரி** : இந்த அவையோர் அனைவரும் பாடலை ரசித்திருப்பீர்கள் என்று நம்புகிறோம். அடுத்து யாகத்தின் முத்தாய்ப்பான முக்கிய அம்சத்தை மகா முனிவர் வசிஷ்டர் கூறுவார்கள்..

**வசிஷ்டர்** : ஆம்!... இந்த யாகத்தின் முக்கிய அம்சம் கேட்பவர்க்கு இல்லை என்று சொல்லாமல் தானம் செய்வதாகும், ஹரிச்சந்திரா... இப்போது நீ தானம் செய்யும் நிகழ்ச்சியைத் தொடங்க ஆசீர்வதிக்கிறேன்.

**ஹரிச்சந்திரன் :** மந்திரியாரே... தானம் பெற வந்தவர்களை வரச் சொல்லுங்கள்.

(தானம் பெறச் சாதாரண மக்கள் வருதல். பொருட்களை லோகிதாசனிடமிருந்து பெற்றுச் செல்லுதல். அனைவருக்கும் கொடுத்து முடித்ததும்)

**ஹரிச்சந்திரன் :** இன்னும் வேறு யாரேனும் இருக்கிறார்களா?

**மந்திரி** : யாரங்கே? இன்னும் தானம் பெறக் காத்திருப்பவர்கள் இருந்தால் அனுப்புங்கள்.

(விசுவாமித்திரரின் வருகை)

**விசுவாமித்திரர்:** ஹரிச்சந்திரா... நீ செய்த யாகம் இனிதே நடந்ததற்கு என் வாழ்த்துக்கள்.

**ஹரிச்சந்திரன் :** விசுவாமித்திர மாமுனியே... தங்கள் வருகைக்கு என் நன்றி. அமருங்கள்.

**வசிஷ்டர்** : வாரும் விசுவரே! யாகத்திற்கு வராமல்... முடிந்தப் பின்பு வந்துள்ளீரே... என்ன விசேஷம்?

**விசுவாமித்திரர்:** விசேஷமான யாகத்திற்கு... அந்த (அழுத்தத்துடன்) விசேஷத்திற்காகத்தான் வந்திருக்கிறேன்...! ஹரிச்சந்திரா... நான் வந்தக் காரணம் தெரியுமா?

**ஹரிச்சந்திரன் :** சொல்லுங்கள் மாமுனியே...!

**விசுவாமித்திரர்:** நான் கேட்கும் பொருட்களை எனக்குத் தருவாயா?

**ஹரிச்சந்திரன் :** தயங்காமல் கேளுங்கள் சுவாமி... தாங்கள் கேட்பதை நான் கொடுக்கிறேன்!

**விசுவாமித்திரர்:** ஒரு மனிதன் யானையின் மீது நின்று கொண்டு ஒரு நாணயத்தைத் தூக்கி எறிய வேண்டும். அது விழும் இடம் வரைக்கும் தங்க நகைகளும், காசுகளும் எனக்குத் தர வேண்டும். முடியுமா...?

**வசிஷ்டர்** : பரவாயில்லை விசுவரே...! நீர் ஏதாவது வில்லங்கமாகக் கேட்டு வைப்பீரோ என்று நான் சந்தேகப்பட்டேன்!

**விசுவாமித்திரர்:** நான் கேட்க வேண்டிய இடத்தில்... கேட்க வேண்டியதைத் தான் கேட்பேன் என்பது வசிஷ்டருக்குத் தெரியாதா என்ன?

**ஹரிச்சந்திரன் :** மாமுனியே... தங்கள் வேண்டுகோள் நிறைவேற்றப்படும். நீங்கள் கேட்டப் பொன்னும், பொருளும் உங்களுக்குத் தரப்படும். மந்திரியாரே... ஏற்பாடு செய்யுங்கள்.

**விசுவாமித்திரர்:** ஹரிச்சந்திரா... உன்னுடையத் தர்ம குணம் வாழ்க! நீ கொடுப்பதாகச் சொல்லும் பொருட்கள் இப்போது எனக்கு வேண்டாம். எனக்கு வேண்டிய போது பெற்றுக் கொள்கிறேன். நான் சென்று வருகிறேன்.

**ஹரிச்சந்திரன் :** சென்று வாருங்கள் மாமுனியே... உங்கள் விருப்பத்தை நிறைவேற்றக் காத்திருக்கிறேன். (மந்திரியை நோக்கி) மந்திரியாரே... பொன் பொருளைப் பாதுகாத்து வையுங்கள். மாமுனிக்குத் தேவைப்படும் போதுத் தரலாம்.

**மந்திரி** : ஆகட்டும் அரசே...

(வசிஷ்டருக்கு மட்டும் தனி ஒளி வட்டம்)

**வசிஷ்டர்** : விசுவாமித்திரர் தானம் கேட்டப் பொருளில் வில்லங்கமோ என்று நினைத்தேன்! ஆனால் தானப் பொருளை எப்போது கேட்கப் போகிறார் என்பதில்தான் வில்லங்கம் இருக்குமோ?

– காட்சி முடிவு –

# காட்சி – 8



**இடம் : வசிஷ்டரின் ஆசிரமம்**

**நேரம் : காலை**

**உறுப்பினர்கள் : ஹரிச்சந்திரன், சந்திரமதி, லோகிதன், வசிஷ்டர்**

(அமைதியானச் சூழல். ஹரிச்சந்திரன், சந்திரமதி, லோகிதன் மீது வெளிச்சம்)

**ஹரிச்சந்திரன் :** தேவி... வேட்டையாடிக் கொண்டே வந்ததில் வசிஷ்டரின் ஆசிரமத்திற்கே வந்து விட்டோம்.

**சந்திரமதி :** ஆம் அரசே... நாட்டிலே திடீரென்று விலங்குகளின் அட்டகாசம் தாங்காமல் போய் விட்டது. அந்தப் பொல்லாத விலங்குகளை வேட்டையாட வந்து, பாதி வேலை முடியும் தருணத்தில் இங்கு வந்தது, மனதுக்கு அமைதித் தருவதாக இருக்கிறது அல்லவா...?

**ஹரிச்சந்திரன் :** வாருங்கள். என் குரு வசிஷ்டரைக் கண்டு வரலாம்.

**வசிஷ்டர் :** வா ஹரிச்சந்திரா... நலம் தானே... என்ன திடீர் விஜயம்...

**ஹரிச்சந்திரன் :** குருவே... வணக்கம். நாங்கள் நலமுடன் இருக்கிறோம். ஆனால் நாட்டிலே பொல்லாத விலங்குகளால் பஞ்சம் பட்டினி ஏற்பட்டு விட்டது. விதைகளைப் பூச்சிகள் அரித்து விடுகின்றன. நெற்கதிர்களை மான்கள் உண்டு விடுகின்றன. சோள வயலைப் பறவைகள் நாசம் செய்கின்றன. மக்கள் உணவு கிடைக்காமல் தவிக்கின்றனர். வனவிலங்குகள் நாட்டுக்குள் வந்து

மக்களைக் கொன்று தின்கின்றன. இந்நிலை எப்போதும் ஏற்பட்டதில்லை. அதனால் வன விலங்குகளை வேட்டையாடப் புறப்பட்டு வந்தேன். வரும் வழியிலே உங்கள் ஆசிரமத்தைக் கண்டேன். உங்களிடம் பேசி அனுமதிப் பெறலாம் என்று வந்தேன்.

**வசிஷ்டர்** : மிகவும் வருத்தப்பட வேண்டிய விஷயம். இந்தத் தீயச் சக்திகளின் வேலை வெகு நாட்கள் நீடிக்காது. உனக்கு யாரோ தொல்லைத் தர வேண்டும் என்றே இப்படிச் செய்கிறார்கள். கவலைப்படாதே. ஆம்? சந்திரமதியும் உன் மகனும் கூட வந்திருக்கிறார்களே!

**சந்திரமதி** : ஆம் குருவே... அவர் வேட்டையாடப் புறப்பட்டபோது, லோகிதனும் உடன் புறப்பட்டான். அவனை விட்டு என்னால் இருக்க முடியாதக் காரணத்தால் அனைவரும் வந்தோம்.

**வசிஷ்டர்** : நாட்டு மக்களின் கஷ்டங்கள் தீர்ந்து, நல்லது நடக்க என் ஆசிகள். வெற்றி உன் பக்கம் இருக்கும்... உண்மை உன் பக்கம் இருக்கும் வரையில்.

**ஹரிச்சந்திரன் :** ஆசிக்கு நன்றி குருவே. உண்மை வழி நடக்க முடிந்ததை எண்ணிப் பெருமைப்படுகிறேன். இனியும் அப்படியே இருக்க முயல்வேன் குருவே.

**வசிஷ்டர்** : நல்லது ஹரிச்சந்திரா... நீ வெற்றியுடன் நாடுத் திரும்ப வேண்டும். தீயச் சக்திகளை அழித்து மக்களைக் காக்க வேண்டும். அதற்கானச் சக்தியை உனக்கு இறைவன் அருள்வாராக.

**ஹரிச்சந்திரன் :** நன்றி குருவே... சென்று வருகிறோம்.

(மூவரும் செல்லுதல்)

**வசிஷ்டர்** : விசுவாமித்திரரே...! போட்டச் சபதத்தில் ஜெயிக்க வேண்டும் என்பதற்காக... உம் திருவிளையாடல்களைத் துவக்கிவிட்டீரா! சபதத்தில் தோற்றுப் புண்ணியங்களில் பாதியை விரைவில் இழக்கத்தான் போகிறீர்...! அதை நான் பார்க்கத் தான் போகிறேன்.

– காட்சி முடிவு –

# காட்சி 9

**இடம் : காட்டின் ஒரு பகுதி**

**நேரம் : மாலை**

**உறுப்பினர்கள் : ஹரிச்சந்திரன், சந்திரமதி, லோகிதன், விசுவாமித்திரர்**

**ஹரிச்சந்திரன் :** விசுவாமித்திரரின் ஆசிரமம் பக்கத்தில் உள்ளது. அங்கு போகும் முன்பு சிறிது ஓய்வெடுக்கலாம் என்று எண்ணியதுத் தப்பாகிவிட்டதே.

**லோகிதன் :** ஏன் தந்தையே?

**ஹரிச்சந்திரன் :** லோகிதா... ஓய்வெடுக்கக் கண்ணயர்ந்தப் போது கெட்டக் கனவு வந்தது. கனவைப் பற்றி உங்களிடம் சொன்னபோது, நீங்கள் ஆறுதல் சொன்னீர்கள். அதற்குப்பின் இந்தப் பெரியக் காட்டுக்கு நடுவிலேயே இரண்டு அழகிய நடனப் பெண்கள் வந்து நாட்டியம் ஆடினார்கள்.

**லோகிதன் :** அவர்களுக்கு முத்து மாலை கூட கொடுத்தீர்களே!

**ஹரிச்சந்திரன் :** ஆம். ஆனால் இருவரும் அந்தப் பரிசுப் போதாது என்று என்னை மணம் செய்யக் கேட்டனர்.

**சந்திரமதி :** இஷ்வாகு வம்ச அரசர்கள் எப்படி இந்தக் கீழ்சாதிப் பெண்களை மணக்க முடியும்? அதனால் மறுத்தீர்கள்.

**ஹரிச்சந்திரன் :** என்னுடைய மறுப்பை ஏற்காமல், மேலும், மேலும் தொந்தரவுச் செய்ததால் அவர்களைக் கோலால் அடிக்க வேண்டியதாகி விட்டது. அவர்கள் யாரென்றுத் தெரியவில்லை. என்ன நடக்கப் போகிறதோ?

**சந்திரமதி :** அரசே... நாம் விசுவாமித்திரரைச் சென்று பார்ப்போம். அமைதிக் கிடைக்கும் என்று எண்ணுகிறேன்.

(அவர்கள் புறப்படத் தயாராகுதல். அப்போது விசுவாமித்திரர் கோபத்துடன் வருதல்)

**ஹரிச்சந்திரன் :** வாருங்கள் மாமுனியே... உங்களைக் காணவே புறப்பட்டோம்.

**விசுவாமித்திரர்:** ஹரிச்சந்திரா... என்ன காரியம் செய்தாய்? என்னுடைய விலங்குகளைக் கொல்கிறாய். என் ஆசிரமத்தின் சூழலையே அழிக்கிறாய். என்னுடைய பெண்களை அடித்திருக்கிறாய்.

**ஹரிச்சந்திரன் :** மாமுனியே... என் மீது தவறு ஏதும் கிடையாது.

**விசுவாமித்திரர்:** என் பெண்கள் உன்னுடைய களைப்புத் தீர நடனம் ஆடிக் காட்டினார்கள். ஆனால் நீயோ அவர்களை அடித்து அனுப்பியிருக்கிறாய்.

**ஹரிச்சந்திரன் :** அவர்கள் என்னிடம் தவறாக நடந்துக் கொண்டதால் அடிக்க வேண்டியதாயிற்று. மன்னித்து விடுங்கள்.

**விசுவாமித்திரர்:** அதெல்லாம் எனக்குத் தெரியாது. அவர்களை நீ மணந்துக் கொண்டால் மட்டுமே உனக்கு மன்னிப்புக் கிடைக்கும்.

**ஹரிச்சந்திரன் :** மாமுனியே... இந்தப் பெண்களை என்னால் எப்படி மணக்க முடியும்? நான் என் மனைவிக்குச் செய்துத் தந்தச் சத்தியம் என்னவாகும். யோசித்துப் பாருங்கள்.

**விசுவாமித்திரர்:** முடியாது. அந்தப் பெண்களை மணந்தேயாக வேண்டும்.

**ஹரிச்சந்திரன் :** மாமுனியே... அந்தப் பெண்களை மணப்பதற்குப் பதிலாக, என் நாட்டையே கொடுக்கச் சொன்னாலும் கொடுத்து விடுவேன்.

**விசுவாமித்திரர்:** என்ன...! உன் நாட்டையேக் கொடுக்கிறாயா?

**ஹரிச்சந்திரன் :** ஆம் சுவாமி!

**விசுவாமித்திரர்:** உண்மையாகத்தான் சொல்கிறாயா?

**ஹரிச்சந்திரன் :** ஆம் சுவாமி... சத்தியமாகச் சொல்லுகிறேன்!

**விசுவாமித்திரர்:** (ஒளி வட்டத்திற்குள் தனியே நின்று) பழத்தை நழுவவிட்டு, பாலில் விழச் செய்திருக்கிறான். ஹரிச்சந்திரன்! ஓய் வசிஷ்டரே...! விரைவிலேயே உம்மைப் போட்டியில் தோற்கடித்துக் காட்டுகிறேன்! அஹ்ஹஹ்ஹ்ஹா!

– காட்சி முடிவு –

# காட்சி 10

**இடம் : ஹரிச்சந்திரனின் அவை**

**நேரம் : மாலை**

**உறுப்பினர்கள் : ஹரிச்சந்திரன், மந்திரி, விசுவாமித்திரர், லோகிதன், சந்திரமதி**

**ஹரிச்சந்திரன் :** இன்று இந்த அவை மிக முக்கியமான விஷயத்திற்காகக் கூட்டப்பட்டுள்ளது.

**மந்திரி :** அரசே... அவசரமாக அவையைக் கூட்டக் காரணம்?

**ஹரிச்சந்திரன் :** மந்திரியாரே... விசுவாமித்திரரின் வேண்டுகோளை நிறைவேற்ற வேண்டும். அதற்காகவே.

**மந்திரி :** என்ன வேண்டுகோள்?

**ஹரிச்சந்திரன் :** என்னுடைய நாட்டை அவருக்குத் தர வாக்களித்து விட்டேன். நாட்டை அவரிடம் ஒப்படைக்கவே அவை கூட்டப்பட்டுள்ளது.

**மந்திரி :** அரசே... என்ன இது? புதுக் குழப்பம்?

**ஹரிச்சந்திரன் :** மந்திரியாரே... குழம்ப வேண்டாம். விசுவாமித்திரர் கேட்டபடி இனிமேல் என் நாடு அவருடையது. என்னுடைய நால்வகைப் படைகளும், அரசு கஜானாவில் இருக்கும் அனைத்துப் பொருட்களும், முத்திரைகளும் இனி அவருடையது. (விசுவாமித்திரரைப் பார்த்து) விசுவாமித்திர மாமுனியே... என் நாட்டு மக்கள் முன்னிலையில், நாட்டை ஒப்படைக்கிறேன். மகிழ்ச்சி தானே...

**விசுவாமித்திரர்:** அது இருக்கட்டும். ஹரிச்சந்திரா... இனிமேல் நீ, உன் மனைவி, மகன் மூவரும் அரச ஆடைகளை விடுத்து, சாதாரண உடைகளை அணிய வேண்டும். உங்கள் ஆடை அணிகலன்களும் இனிமேல் எனக்குச் சொந்தம்.

**ஹரிச்சந்திரன் :** மாமுனியே... தங்கள் விருப்பம் அப்படியெனில் ஆகட்டும். நீங்கள்தான் இனி இந்நாட்டின் அரசர். நாங்கள் உங்களுடைய அரசர். நாங்கள் உங்களுடைய நாட்டின் சாதாரணப் பிரஜைகள்.

**மந்திரி :** அரசே... நீங்கள் செய்யும் காரியம் அரசியல் நீதிக்குப் புறம்பானது. மக்களையும், அவையையும் கலந்து ஆலோசிக்காமல், நாட்டை முனிவரிடம் தருவதா... முனிவருக்கும் அரசியல் நியதித் தெரியுமே!

**ஹரிச்சந்திரன் :** மந்திரியாரே... அரசியல் நியதிக்கு அப்பாற்பட்டது நான் கொடுத்த வாக்கு. இனிமேல் நான் அரசனல்ல.

**மந்திரி :** அரசே நான் சொல்ல வந்தது என்னவென்றால்...

**ஹரிச்சந்திரன் :** மந்திரியாரே... மாமுனி கேட்டபடி அவருக்கு அரசைத் தந்து விட்டேன். அவருடன் சேர்ந்து மக்களைக் காக்க வேண்டியது இனி தங்களது பொறுப்பு. நாங்கள் சென்று வருகிறோம்.

**லோகிதன் :** தாயே... நாம் எங்கேச் செல்கிறோம்?

**சந்திரமதி :** லோகிதா... இனி உன் தந்தை அரசருமல்ல. நீ இளவரசனுமல்ல. நாம் இந்நாட்டின் சாதாரணப் பிரஜைகளாக வாழப் போகிறோம்.

**லோகிதன் :** ஏனம்மா?

**சந்திரமதி :** பிறகு சொல்கிறேன். வா போகலாம்.

(மூவரும் செல்லுதல்)

**விசுவாமித்திரர்:** ஹரிச்சந்திரா... நில், எங்கே எனக்குச் சேர வேண்டியப் பொக்கிஷம்?

(மூவரும் நிற்றல்)

**ஹரிச்சந்திரன் :** (ஆச்சரியத்துடன்) பொக்கிஷமா?

**விசுவாமித்திரர்:** பகு ஸவர்ண யாகத்தின் போது எனக்குத் தானமாகக் கொடுத்தப் பொக்கிஷத்தைத் தந்து விட்டுச் செல்...

**ஹரிச்சந்திரன் :** மாமுனியே... நான் தான் என்னிடத்தில் இருக்கும் அனைத்தையும் உங்களுக்குத் தந்து விட்டேனே. அதற்கு மேல் பொக்கிஷத்தைக் கேட்டால் நான் எங்குச் செல்வேன்?

**விசுவாமித்திரர்:** அதெல்லாம் கிடையாது. நீ எனக்குக் கடன் பட்டதைத் தந்தேயாக வேண்டும். அது முடியாவிட்டால், நீ கொடுக்க வேண்டியது ஏதும் இல்லை என்று பொய் சொல்.

**ஹரிச்சந்திரன் :** மாமுனியே... நான் உண்மை வழியில் நடக்க நோன்பு ஏற்றிருக்கிறேன். அதனால் பொய் சொல்ல விரும்பவில்லை. எனக்கு சில நாட்கள் அவகாசம் கொடுக்க வேண்டுகிறேன். உங்களுக்குச் சேர வேண்டியதைத் தந்து விடுகிறேன்.

**விசுவாமித்திரர்:** ஆகட்டும் ஹரிச்சந்திரா... உனக்கு 48 நாட்கள் அவகாசம் தருகிறேன். ஒரு மண்டலத்திற்குள் என் கடனை அடைக்க வேண்டும்.

**ஹரிச்சந்திரன் :** நன்றி மாமுனியே... உங்கள் கடனை உயிரைத் தந்தேனும் அடைக்க முயல்கிறேன்.

**விசுவாமித்திரர்:** நீ கடனை அடைக்கும் வரை என்னுடையச் சீடன் ஒருவன் உன்னுடனே இருப்பான்.

**ஹரிச்சந்திரன் :** ஆகட்டும் மாமுனியே... நாங்கள் சென்று வருகிறோம். சீடனை அனுப்பி வையுங்கள்.

**மந்திரி :** அரசே... உங்களுக்கா இந்த நிலை...?

**ஹரிச்சந்திரன் :** மந்திரியாரே... நான் இனி உங்கள் அரசனல்ல.

**மந்திரி :** அரசே... வாருங்கள். நானும் உங்களுடன் வருகிறேன்.

**ஹரிச்சந்திரன் :** வேண்டாம் மந்திரியாரே... இந்த உங்கள் சொற்கள் நீங்கள் என்னிடத்தில் வைத்து இருக்கும் மதிப்பைக் காட்டுகிறது. மாமுனிவர் தான் அரசர். நீங்கள் எப்படி என் மந்திரியாக இருந்து அரசியல் பொறுப்புகளைக் கவனித்தீர்களோ அதே போல் மாமுனிக்கு மந்திரியாக இருந்து மக்களைக் காக்க வேண்டும். ஆதுவே நீங்கள் எனக்குத் தரும் மரியாதை.

**மந்திரி :** ஆகட்டும் அரசே... பத்திரமாகச் சென்று வாருங்கள். உங்கள் துன்பம் தீரத் தினம் நான் கடவுளை வேண்டிக் கொள்வேன்.

**ஹரிச்சந்திரன் :** வருகிறோம்.

(ஹரிச்சந்திரன் செல்லுதல்)

**விசுவாமித்திரர்:** (ஒளி வட்டத்திற்குள் தனியே நின்று) பொய்க் கோபுரத்தில் ஏற ஹரிச்சந்திரன் இரண்டாவது படியில் கால் வைத்து விட்டான்!

– காட்சி முடிவு –

# காட்சி 11



**இடம் : விசுவாமித்திரரின் ஆசிரமம்**

**நேரம் : மாலை**

**உறுப்பினர்கள்: விசுவாமித்திரர், அவரது சீடனான நட்சத்திரேயன்**

**விசுவாமித்திரர்:** நட்சத்திரேயா...

**நட்சத்திரேயன்** : குருவே...

**விசுவாமித்திரர்:** நான் போட்டியில் வெல்ல வேண்டும். ஹரிச்சந்திரனைப் பொய் சொல்ல வைக்க வேண்டும்; சொன்னச் சொல் தவற வைக்க வேண்டும். அது உன் கைகளிலேதான் இருக்கிறது.

**நட்சத்திரேயன்** : குருவே... நான் என்ன செய்ய வேண்டும்?

**விசுவாமித்திரர்:** நீ தான் ஹரிச்சந்திரனிடமிருந்துக் கடனைத் திருப்பி வாங்கி வர வேண்டும். அவர்களால் கடனைத் திருப்பி அடைக்க முடிகிறதோ இல்லையோ... அவர்களை நீ பல வகையிலும் தொந்தரவுச் செய்ய வேண்டும். கொடுமைப்படுத்த வேண்டும். காட்டிலே செல்லும் போது உணவு உண்ண முடியாமல் செய்ய வேண்டும்.

**நட்சத்திரேயன்** : அதெப்படிச் செய்ய முடியும்?

**விசுவாமித்திரர்:** அவர்கள் உணவையும் நீயே உண்டு விடு. காட்டிலே சரியான வழியிலே செல்ல விடாதே. அடிக்கடி, கடன் அடைக்க வேண்டிய நாட்களை நினைவுப்படுத்தித் தொந்தரவுக் கொடு. எக்காரணம் கொண்டும் இரக்கம் காட்டாதே.

**நட்சத்திரேயன்** : நீங்கள் போட்டியில் வெல்ல நான் எதையும் செய்வேன் குருவே.

**விசுவாமித்திரர்:** நல்லது... நட்சத்திரேயா... ஹரிச்சந்திரனை சிறிதும் ஓய்வெடுக்க விடாதே. அவன் மிகவும் களைத்தபோது... உனக்கு பணிவிடைச் செய்யச் சொல். அவனை எப்படியும் பொய் சொல்லும்படிச் செய்து விடு. என் சபதம் நிறைவேற நீ ஒரு சிறு கருவியே. உன் பின் என்னுடைய முழுச் சக்தியும் இருக்கும். நான் சமயத்தில் பெரும் புயலாக, கொளுத்தும் வெயிலாக, வருத்தும் தீயாக, கொடிய விலங்காக வருவேன். நான் ஹரிச்சந்திரனை, பசி, தாகம், தூக்கம் தந்துக் கொடுமைப்படுத்துவேன். ஆஹாஹ்ஹா!

**நட்சத்திரேயன்** :ஆஹா! விசுவம் என்றால் உலகம்! மித்திரன் என்றால் நண்பன்...! உலகத்திற்கே நண்பன் என்ற பெயர் கொண்ட எனது குருநாதர் விசுவாமித்திரருக்கு... ஹரிச்சந்திரன் மேல்... என்ன கருணை! என்ன அன்பு...! ஆஹா... உன் உடம்பே புல்லரிக்கிறது!

– காட்சி முடிவு –

# காட்சி 12



**இடம் : காடு**

**நேரம் : மதியம்**

**உறுப்பினர்கள் : ஹரிச்சந்திரன், சந்திரமதி, லோகிதன், நட்சத்திரேயன்**

(அனைவரும் களைப்புடன் நடந்து வருதல்)

**லோகிதன்** : தந்தையே... என்னால் நடக்கவே முடியவில்லை.

**ஹரிச்சந்திரன் :** லோகிதா... கொஞ்சம் பொறுத்துக் கொள். இன்னும் சிறிது தூரம் போனால் வாரணாசி வந்து விடும்.

**லோகிதன்** : நாம் எதற்கு அங்கே செல்ல வேண்டும்?

**ஹரிச்சந்திரன் :** லோகிதா... மாமுனி விசுவாமித்திரரின் கடனை அடைக்க வேண்டும். நம் நாட்டிலே எனக்குப் பணம் பெற வழி இல்லை. அதனால் தான்.

**லோகிதன்** : தந்தையே... எனக்குப் பசிக்கிறது.

**ஹரிச்சந்திரன் :** லோகிதா... தேவி... இருவரும் என்னை மன்னிக்க வேண்டும். என் பொருட்டு உங்களுக்குத்தான் எவ்வளவு கஷ்டம். உண்ண உணவும் இல்லை. காட்டிலே நடக்க வேண்டிய கஷ்டம். இவை நான் முன்ஜன்மத்தில் செய்தப் பாவத்தின் பலன் என்று எண்ணுகிறேன். லோகிதா... அதோ... அங்கே மரத்திலே ஓரிரு பழங்கள் இருக்கின்றன. பறித்துத் தருகிறேன் வா...

**நட்சத்திரேயன்** : ஹரிச்சந்திரா... எனக்கும் பசிக்கிறது. உடனே அந்தப் பழங்களைப் பறித்து எனக்குக் கொடு.

**ஹரிச்சந்திரன் :** (லோகிதனைப் பார்த்து) லோகிதா... பழம் அவருக்குத் தான்.

**நட்சத்திரேயன்** : கடனை அடைக்க இன்னும் பதினைந்து நாட்களே இருக்கின்றன. என்றைக்குப் கடனைத் தரப் போகிறாய். இன்னும் எத்தனை நாட்கள் தான் உன்னுடன் பாடுபட வேண்டுமோ...?

**ஹரிச்சந்திரன் :** எனக்காகக் கஷ்டங்களைப் பொறுக்க வேண்டுகிறேன். கடனை வாரணாசி சென்றதும் அடைக்க முயல்கிறேன்.

**நட்சத்திரேயன்** : அங்கே சென்றால் மட்டும், உன்னால் எப்படிக் கடனை அடைக்க முடியும்?

**சந்திரமதி** : யாரிடமாவதுக் கடனாகப் பெற வேண்டும்.

**நட்சத்திரேயன்** : அந்நாட்டிலே உங்களுக்கு யாரைத் தெரியும்? தெரியாதவர்களுக்குக் கடன் யார் தருவார்கள்?

**ஹரிச்சந்திரன் :** ஆம்... முனிவர் சொல்வதும் சரிதான். யார் எனக்குக் கடன் தருவார்கள்? கஷ்டப்பட்டு வேலைச் செய்துத் தான் கடனை அடைக்க வேண்டும்.

**நட்சத்திரேயன்:** இருப்பதோ பதினைந்து நாட்கள். அதில் என்ன வேலைச் செய்துக் கடனை அடைக்க முடியும்?

**ஹரிச்சந்திரன் :** கடவுளே... நான் என்ன செய்வேன். இப்படி ஒரு இக்கட்டான நிலைக்கு என்னைத் தள்ளி விட்டாயே! உயிரை மாய்த்துக் கொள்ளலாம் என்றாலும், சொன்னச் சொல் தவறியதாக ஆகி விடுமே... எனக்கொரு வழிகாட்டு இறைவா.

**சந்திரமதி** : அரசே... எனக்கொரு யோசனை.

**ஹரிச்சந்திரன் :** என்ன தேவி?

**சந்திரமதி** : அரசே... எங்கள் இருவரையும் யாருக்காவது விற்று விடுங்கள். கிடைக்கும் பணத்தில் கடனை அடையுங்கள்.

**ஹரிச்சந்திரன் :** என்ன சொல் சொன்னாய் தேவி? உங்களை விற்பதா? கணவன் ஸ்தானத்தில் இருந்து கொண்டு செய்யும் செயலா? தந்தை ஸ்தானத்தில்

இருந்து கொண்டு செய்யும் செயலா? திருமணத்தின் போது உனக்குச் செய்து கொடுத்த வாக்கு என்னாவது?

**சந்திரமதி** : அரசே... தற்போது எங்களை விற்றுக் கடனை அடையுங்கள். பிறகு பணம் சம்பாதித்து எங்களைத் திரும்பவும் மீட்டு விடுங்கள். அப்போது உங்கள் வார்த்தைக்கு எந்த இழுக்கும் வராது.

**ஹரிச்சந்திரன் :** இருந்தாலும்... உங்களை விற்பதென்பது என்னால் முடியாதக் காரியம்.

**சந்திரமதி** : உங்களுக்கு நானும் உங்கள் மகனும் முக்கியமா? சொன்னச் சொல்லைக் காப்பது முக்கியமா? முடிவு செய்துக் கொள்ளுங்கள்.

**ஹரிச்சந்திரன் :** தேவி... நீ சொல்வதும் சரிதான். நீங்கள் என்னை மன்னிக்க வேண்டும். என் பொருட்டு நீங்கள் படும் வேதனையை உலகிலே யாரும் படக் கூடாது. வாருங்கள்... கடனை அடைக்கும் வழியைப் பார்ப்போம்.

**நட்சத்திரேயன்**: கடனை விரைவில் தந்து என்னைத் திருப்பி அனுப்பி விட்டால் நல்லது. ஹரிச்சந்திரா... அந்தப் பழங்களைப் பறித்து வா...

**ஹரிச்சந்திரன் :** ஆகட்டும் முனிவரே...

– காட்சி முடிவு –

# காட்சி 13



**இடம் : வாரணாசியில் ஒரு முச்சந்தி.**

**நேரம் : மாலை**

**உறுப்பினர்கள் : ஹரிச்சந்திரன், சந்திரமதி, லோகிதன், நட்சத்திரேயன், பிராமணன், மக்கள்(3)**

**ஹரிச்சந்திரன் :** வாருங்கள்... வாருங்கள்... பெண்ணையும், சிறுவனையும் வாங்கிச் செல்லுங்கள்.

(சிலரை அங்கே நடமாட விடுதல். அருகே வந்துப் பார்த்துவிட்டுச் செல்லுதல்).

**ஹரிச்சந்திரன் :** வாருங்கள்... வாருங்கள்... பெண்ணையும், சிறுவனையும் வாங்கிச் செல்லுங்கள்.

(பிராமணன் ஒருவன் வருதல்)

**ஹரிச்சந்திரன் :** வாருங்கள் பிராமணரே... பெண்ணையும் சிறுவனையும் வாங்கிச் செல்லுங்கள்.

**பிராமணன் :** யாரிவர்கள்?

**ஹரிச்சந்திரன் :** என்னுடைய மனைவியும், மகனும்.

**பிராமணன் :** எதற்காக அவர்களை விற்கிறாய்?

**ஹரிச்சந்திரன் :** நான் பட்டக் கடனை அடைக்க...

**பிராமணன் :** எவ்வளவு விலை?

**ஹரிச்சந்திரன் :** நூறாயிரம் பொற்காசுகள்.

**பிராமணன் :** அவ்வளவுத் தர முடியாது. பெண் வயதானவளாகத் தெரிகிறாள். சிறுவனோ மிகவும் நோஞ்சானாக இருக்கிறான். அவர்களால் கடினமான வேலைகளைச் செய்யவே முடியாது. என்னால் நீ கேட்கும் விலைத் தர முடியாது.

**ஹரிச்சந்திரன் :** பிராமணரே... உங்களால் எவ்வளவுத் தர முடியுமோ... அதைத் கொடுங்கள். என் கடனின் சிறு பங்கையாவது அடைக்க முயல்வேன்.

**பிராமணன் :** என்னால் பத்தாயிரம் பொற்காசுகள் மட்டும் தர முடியும்.

**ஹரிச்சந்திரன் :** சரி பிராமணரே... அதையேனும் கொடுங்கள்.

**பிராமணன் :** இவர்களை நான் வீட்டிற்கு அழைத்துச் செல்கிறேன். கிழக்கு வீதியில் முதல் வீடு என்னுடையது. பணத்தை வீட்டிற்கு வந்துப் பெற்றுக் கொள்.

**ஹரிச்சந்திரன் :** நல்லது பிராமணரே... தயவு செய்து என் மனைவியையும், மகனையும் நன்குக் கவனித்துக் கொள்ளுங்கள்.

**பிராமணன் :** விலைக்கு வாங்கியவர்கள் என்ன விருந்தாளிகளா? கவனித்துக் கொள்வதற்கு...

(மூவரும் செல்லுதல், சந்திரமதி வருகிறேன் என்பதை முகபாவத்திலேயே காட்டிவிட்டுச் செல்லுதல்)

**ஹரிச்சந்திரன் :** முனிவரே... உங்கள் கடனில் ஒரு பங்காக நீங்களே சென்றுப் பணத்தைப் பெற்றுக் கொள்ளுங்கள். எனக்கு ஏதாவது வேலை கிடைக்கிறதா என்று பார்த்து வருகிறேன். மீண்டும் நாம் இங்கேயே சந்திப்போம்.

**நட்சத்திரேயன்:** பத்தாயிரம் பொன் தானே! இதை நான் உன்னுடன் இத்தனை நாட்கள் வந்ததற்கானத் தினக்கூலியாக எடுத்துக் கொள்கிறேன். உன் கடன் பாக்கி இன்னும் அப்படியே தான் இருக்கிறது.

**ஹரிச்சந்திரன் :** முனிவரே... இதென்ன வாதம். கிடைக்கும் பொன்னை தயவு செய்து கடனுக்கானப் பொருளாக ஏற்க வேண்டுகிறேன்.

**நட்சத்திரேயன்:** ஹரிச்சந்திரா... இந்த முப்பது நாட்களாக நான் படும்பாடு எனக்குத் தானே தெரியும். எவ்வளவு தூரம் நடந்திருக்கிறேன்.

**ஹரிச்சந்திரன் :** எவ்வளவு இடங்களில் நான் உங்களைத் தூக்கி வந்திருக்கிறேன்.

**நட்சத்திரேயன்:** சரியாக உணவு கூட உண்டதில்லை.

**ஹரிச்சந்திரன் :** நாங்கள் உண்ணாமல், உங்களுக்குத் தானே கிடைக்கும் உணவினைத் தந்தோம்.

**நட்சத்திரேயன்:** சரியானத் தூக்கமும் கிடையாது.

**ஹரிச்சந்திரன் :** ஐயா... நீங்கள் நன்கு உறங்க வேண்டும் என்று இரவெல்லாம் கண் விழித்துப் பாதுகாத்தேனே!

**நட்சத்திரேயன்:** நீ என்ன சொன்னாலும் சரி... எனக்கு உன் கூட வந்த கூலி தான் இந்தப் பத்தாயிரம் பொற்காசுகள். சீக்கிரமே கடனை அடைக்கப் பார்.

**ஹரிச்சந்திரன் :** முனிவரே... தயவு காட்டுங்கள்.

**நட்சத்திரேயன்:** முடியாது. தயவு காட்ட வேண்டுமென்றால், கடனே தர வேண்டியது இல்லையென்று பொய் சொல்.

**ஹரிச்சந்திரன் :** வேண்டாம் முனிவரே... இத்தனை நாட்களாக நாங்கள் பட்ட கஷ்டம் வீணாகக் கூடாது. இன்னும் இருக்கும் நாட்களிலே உங்கள் கடனை எப்படியாவது அடைக்கிறேன். இந்தப் பொன்னை நீங்களே வைத்துக் கொள்ளுங்கள்.

**நட்சத்திரேயன்:** ஆகட்டும் ஹரிச்சந்திரா... நான் பொன்னைப் பெற்று வருகிறேன். இன்று இரவு நாம் இதே இடத்தில் சந்திக்கலாம்.

**ஹரிச்சந்திரன் :** சென்று வருகிறேன் முனிவரே...

**நட்சத்திரேயன்:** (ஒளி வட்டத்தில் தனியாக) குருநாதர் சொன்னதுப் போல் இப்போது ஹரிச்சந்திரன் பொய் கோபுரத்தில் ஏற மூன்றாவது படியில் கால் வைத்து விட்டான்! ஆஹ்ஹஹ! சே...! குருநாதர் போல் சிரிக்க வரவில்லையே...! நமக்கேன் இந்தச் சிரிப்பு!

– காட்சி முடிவு –

# காட்சி 14



**இடம் : வாரணாசியில் ஒரு தெரு.**

**நேரம் : மாலை**

**உறுப்பினர்கள் : ஹரிச்சந்திரன், நட்சத்திரேயன், வீரபாகு**

**நட்சத்திரேயன்:** ஹரிச்சந்திரா... உன் கடனை அடைக்க இன்னும் ஒரு நாள் தான் இருக்கிறது. இப்போது கூட நான் கடன் தர வேண்டியதுக் கிடையாது என்று பொய் சொல். விட்டு விடுகிறேன்.

**ஹரிச்சந்திரன் :** இன்னும் ஒரு நாள் தான் இருக்கிறதே!

**நட்சத்திரேயன்:** நீயோ... உன்னையும் விற்கத் தயாராகி விட்டாய். ஆனால் வாங்கத்தான் ஆட்கள் இல்லை.

(வீரபாகு அந்தப் பக்கம் வருதல்)

**ஹரிச்சந்திரன் :** இஷ்வாகு வம்சத்து அரசன் நான். என்னை யாராவது வாங்கிக் கொள்ளுங்கள்.

**வீரபாகு :** நீ அரசனா? நான் உன்னை வாங்கிக் கொள்கிறேன். உனக்கு என்ன விலை?

**ஹரிச்சந்திரன் :** ஐயா மிக்க நன்றி. நான் ஒரு யானை மீது ஏறி ஒரு நாணயத்தை எறிவேன். அவ்வளவு தூரம் வரைக்கும் பொன் தர வேண்டும்.

**வீரபாகு :** நான் அவ்வளவு பொன்னைத் தர வேண்டுமென்றால் நீ எவ்வளவு வேலை செய்ய வேண்டும் தெரியுமா?

**ஹரிச்சந்திரன் :** நீங்கள் என்ன வேலைச் சொன்னாலும் நான் செய்யத் தயார். எனக்கான விலையை நீங்கள் ஒப்புக் கொள்ளுங்கள்.

**வீரபாகு :** நீ கேட்ட விலையை... நான் தருகிறேன். கவலைப்படாதே. நீ என்னுடைய சுடுகாட்டிலே. நாள் முழுவதும் வெட்டியானாக வேலைச் செய்ய வேண்டும். சம்மதமா...

**ஹரிச்சந்திரன் :** ஆண்டவன் எனக்கு விதித்தது அதுதான் என்றால் வெட்டியான் வேலையையும் செய்ய நான் தயார். இது என் முன்வினைப் பயன். எனக்காக நீங்கள் தரும் பொருளை, இந்த முனிவர் பெற்றுக் கொள்வார். முனிவரே... உங்கள் குருவுக்கு நான் பட்டக் கடனை அடைத்து விட்டேன். உங்களுக்கு மகிழ்ச்சி தானே!

**நட்சத்திரேயன்:** ஹரிச்சந்திரா... உன் கடனை அடைக்க வெட்டியானாக வேலைச் செய்யவும் தயாராகி விட்டாயே?

**ஹரிச்சந்திரன் :** முனிவரே... உங்களுக்கு வேண்டியது கடனுக்கானப் பொருள். அதை இவரிடம் பெற்றுச் செல்லுங்கள். என்னால் உங்களுக்கு ஏற்பட்டக் கஷ்டங்களைப் பொறுத்துக் கொள்ள வேண்டுகிறேன்.

**நட்சத்திரேயன்:** ஹரிச்சந்திரா... என்னை மன்னித்து விடு. குருவின் பேச்சைக் கேட்டு, ஒரு நல்ல மனிதனுக்குப் பல கஷ்டங்களைத் தந்ததற்கு நான் வெட்கப்படுகிறேன். உங்களைப் போன்ற மனிதருடன் இருக்க வாய்ப்பு கிடைத்ததற்கு நான் ஆண்டவனுக்கு நன்றிக் கூற விரும்புகின்றேன். நான் இந்தப் பொருட்களைக் குருவிடம் சேர்த்து விடுகிறேன். இனிமேல் கடன் பற்றிய மனக்கிலேசம் எதும் இல்லாமல் வேலையைச் செய்யலாம்.

**வீரபாகு :** ஆகட்டும். வேலையைக் கவனமாகச் செய். பிணத்தை எரிக்க ஒவ்வொருவரிடமும் பத்துப் பொற்காசுகள் வாங்க வேண்டும். சுடுகாடு கிழக்கு பக்கத்தில் அமைந்து இருக்கிறது. நான் மாலை வந்துப் பணத்தைப் பெற்றுக் கொள்கிறேன்.

**ஹரிச்சந்திரன் :** ஆகட்டும் ஐயா... நான் இப்போதே சுடுகாட்டிற்குச் சென்று வேலையைத் தொடங்குகிறேன்.

(ஹரிச்சந்திரன் செல்லுதல்)

**நட்சத்திரேயன்:** (ஒளி வட்டத்தில் தனியே) ஹரிச்சந்திரன் பொய் கோபுரத்தின் படிகளில் ஏறுவதாக அல்லவா குருநாதர் தப்புக் கணக்குப் போட்டு விட்டார்!

ஆனால்**...** இடுகாட்டில் வெட்டியான் வேலைச் செய்யப் புறப்பட்டுள்ளதன் மூலம்**...** ஹரிச்சந்திரன் உண்மைக் கோபுரத்தின் நான்காவது படியிலல்லவா கால் வைத்திருக்கிறான்**!**

**–** காட்சி முடிவு **–**

# காட்சி 15

**இடம் : தோட்டம்**

**நேரம் : மாலை**

**உறுப்பினர்கள் : லோகிதன், தோழி**

(கடனை அடைத்த ஹரிச்சந்திரனைக் கண்டு விசுவாமித்திரருக்கு மேலும் கோபம் வந்தது. தன்னுடையப் பக்கத்தை வெற்றியாக்க வேண்டி மற்றொரு வழியைக் கையாள முயன்றார். விசுவாமித்திரரால் அனுப்பப்பட்டப் பிராமணன் தான் சந்திரமதியையும், லோகிதனையும் விலைக்கு வாங்கியது. அதனால் அவர்களை அதிகமான வேலை வாங்கியும், உணவும் சரியாகத் தராமல் கொடுமைப்படுத்தினான் அந்த பிராமணன். ஒரு நாள் மாலை தோட்டத்திலே...)

**தோழி** : லோகிதா... வா நாம் விளையாடி விட்டுச் செல்வோம்.

**லோகிதன்** : நான் வரவில்லை.

**தோழி** : ஏன்?

**லோகிதன்** : என் தாயார் பாவம். அவர்களுக்கு நிறைய வேலை. நான் போய் உதவ வேண்டும்.

**தோழி** : அப்ப சரி... நான் விளையாடிவிட்டுச் செல்கிறேன். நீ பூக்களை எடுத்துக் கொண்டு வீட்டுக்குப் போ.

**லோகிதன்** : ஆமாம்... நான் வேகமாகச் செல்ல வேண்டும்.

(லோகிதன் பூக்களை எடுத்தவாறே மறைதல்)

(பாம்பு நடனம். நடனம் முடியும் நேரத்தில் லோகிதன் மேடை மேல் தோன்றுதல். பாம்பு கடித்ததும் அவன் கீழே மயங்கி விழுதல்)

– காட்சி முடிவு –

# காட்சி 16

**இடம் : பிராமணனின் வீடு**

**நேரம் : மாலை**

**உறுப்பினர்கள் : சந்திரமதி, பிராமணன், விஷயம் சொல்ல வந்த பெண் ஈஸ்வரி**

**ஈஸ்வரி** : (பிராமணனை நோக்கி) அக்காவைப் பார்க்க வேண்டும்.

**பிராமணன்** : என்ன விஷயம்... வேலைச் செய்யும் போது இதென்னத் தொல்லை... பூஜைக்கு ப் பூக்களைப் பறிக்கச் சென்றவனை வேறே இன்னும் காணோம்.

**ஈஸ்வரி** : இல்லை ஐயா... பூக்களைப் பறிக்க வந்த லோகிதனைப் பற்றி...

**பிராமணன்** : என்ன ஆயிற்று அந்த நோஞ்சான் சிறுவனுக்கு... இறந்துவிட்டானா என்ன...

**ஈஸ்வரி** : ஐயா...

**பிராமணன்** : சரி... சரி... வந்த விஷயத்தை அந்தப் பெண்ணிடமே சொல்.

**ஈஸ்வரி** : அக்கா... அக்கா...

(சந்திரமதி உள்ளிருந்து வருதல்)

**சந்திரமதி** : என்ன விஷயம் ஈஸ்வரி?

**ஈஸ்வரி** : அக்கா... பூக்களைப் பறிக்க நான் சென்றபோது, லோகிதனை பாம்புக் கடித்து விட்டது. உங்களிடம் சொல்ல ஓடி வந்தேன்.

**சந்திரமதி** : என்ன? பாம்புக் கடித்து விட்டதா... எனக்கிருந்த ஒரே துணை அவன் தான்.

**ஈஸ்வரி** : அக்கா... பாம்புக் கடித்து வெகு நேரம் ஆகியிருக்கும் என்று எண்ணுகிறேன். அவன் இறந்திருப்பான் என்றே எண்ணுகிறேன்.

**சந்திரமதி** : (பதட்டத்துடன், கிளம்பும் தோரணையுடன்) ஈஸ்வரி... அந்த இடத்தை எனக்குக் காட்டுவாயா?

**பிராமணன்** : பெண்ணே... எங்கே கிளம்பி விட்டாய்? வீட்டில் வேலை இருக்கும்போது எப்படிப் போகலாம்?

**சந்திரமதி** : ஐயா... என்னுடைய மகன் பாம்புக் கடித்து இறந்து விட்டான் என்று தெரிகிறது? அவனை எரித்து ஈமக்கடனைச் செய்ய வேண்டுமே...

**பிராமணன்** : அதையெல்லாம் செய்ய இப்போது நேரம் தர முடியாது. வீட்டு வேலைகளை முடித்து விட்டுச் செல்.

**சந்திரமதி** : ஐயா... அப்படியேச் செய்கிறேன். குழந்தையை சுடுகாட்டிலே எரிக்கப் பணம் வேண்டும்.

**பிராமணன்** : நீ செய்யும் வேலைக்கு நான் கொடுத்த விலையே அதிகம். அதில் இந்தச் செலவு வேறா... பணம் ஏதும் தர முடியாது பெண்ணே... போ! போ! வேலையைப் பார்!

**சந்திரமதி** : ஐயா... வேலை முடிந்ததுமே செல்கிறேன். (ஈஸ்வரியைப் பார்த்து) ஈஸ்வரி.. நான் வேலை முடிந்ததும் வருகிறேன். போய் வா...

**ஈஸ்வரி** : வருகிறேன் அக்கா...

(ஈஸ்வரி செல்லுதல்)

– காட்சி முடிவு –

# காட்சி 17



**இடம் : சுடுகாடு**

**நேரம் : இரவு**

**உறுப்பினர்கள் : ஹரிச்சந்திரன், சந்திரமதி**

**ஹரிச்சந்திரன் :** பெண்ணே... இந்த நேரத்தில் இங்கே என்ன செய்து கொண்டு இருக்கிறாய்?

**சந்திரமதி :** ஐயோ... என் மகன் பாம்புக் கடித்து இறந்து விட்டான். அவனை எரிக்க வந்தேன். உதவிச் செய்யுங்கள்.

**ஹரிச்சந்திரன் :** இந்தச் சுடுகாடு வீரபாகு என்பவருக்குச் சொந்தமானது. இங்கு உடலை எரிக்கப் பத்து பொற்காசுகள் தர வேண்டும். பணத்தைக் கொடு. உடலை எரிக்கிறேன்.

**சந்திரமதி :** ஐயா... நான் மிகச் சாதாரணக் கூலிக்காரப் பெண். என் எஜமானர் பிணத்தை எரிக்கப் பணம் தர மாட்டேன் என்று சொல்லி விட்டார். தயவு செய்து மனம் இரங்க வேண்டும்.

**ஹரிச்சந்திரன் :** அதெல்லாம் எனக்குத் தெரியாது. நானோ இங்கு காவலுக்கு இருக்கும் வேலையாள். என் வேலைப் பணம் வசூலிப்பது. அதனால் பணம் தந்தால் தான் காரியம் நடக்கும்.

**சந்திரமதி** : ஐயா... என்னிடம் பணம் தான் இல்லை என்கிறேனே... மகனை இப்படியே போட்டு விட்டுச் செல்லவும் மனசுக் கேட்கவில்லை.

**ஹரிச்சந்திரன் :** உன்னிடம் தான் தாலி இருக்கிறதே. அதை விற்றுப் பணம் கொண்டு வா.

**சந்திரமதி** : ஐயோ... என் நாயகனுக்கு ஏதோ பெருத்த ஆபத்து என்று எண்ணுகிறேன். என் தாலியை என் கணவரால் மட்டுமே பார்க்க முடியும்! அவருக்கு ஆபத்து என்றால் மட்டுமே மற்றவர் கண்களுக்குத் தெரியும். இப்போது உங்களுக்குத் தெரிகிறது என்றால்... கடவுளே... என் கணவருக்கு எந்தக் கஷ்டமும் வராமல் காப்பாற்றுங்கள்.

**ஹரிச்சந்திரன் :** பெண்ணே... எதுவும் பேச வேண்டாம். எனக்கு நிறைய வேலை இருக்கிறது. பணத்தைக் கொடு! பிணத்தை எரிக்கிறேன்!

**சந்திரமதி** : ஐயா... பிணத்தை எரிக்காமல் இந்த இடத்தை விட்டுச் செல்ல மாட்டேன்.

**ஹரிச்சந்திரன் :** (கோபத்துடன்) அப்படியென்றால், பிணத்தை நான் உன் கண்ணுக்குத் தெரியாமல் தூக்கி எறிகிறேன் பார்.

(வேகமாக தூக்கி எறியும் நோக்கத்துடன் செல்லுதல், ஹரிச்சந்திரனைப் பார்த்து)

**சந்திரமதி** : (கவலையுடன்) ஐயோ... (கதறுதல்)

– காட்சி முடிவு –

# காட்சி 18

**இடம் : சுடுகாட்டின் மறுபக்கம்**

**நேரம் : இரவு**

**உறுப்பினர்கள் : இரு திருடர்கள் – கருப்பன், இருளன்**

**கருப்பன்** : இருளா... இன்று எப்படியோ மன்னரின் மகனையே கடத்தி வந்து விட்டோம்.

**இருளன்** : கருப்பா... கடத்தி வந்தது இருக்கட்டும். மாட்டிக் கொண்டால் சிரச்சேதம் நிச்சயம்.

**கருப்பன்** : மாட்டினால் தானே...

**இருளன்** : மன்னரின் மகன் நம்மை அடையாளம் காட்டிவிட்டால்.

**கருப்பன்** : அவன் நகையெல்லாம் கழற்றி விடலாம். அவன் சிறுவன் தானே... அவனைக் கொன்று விடுவோம்.

**இருளன்** : சிறுவனைக் கொல்வதா?

**கருப்பன்** : ஆம்... இல்லாவிட்டால் இன்று இல்லை என்றாலும், என்றாவது ஒரு நாள் அவன் நம்மைக் காட்டிக் கொடுத்து விடுவானே...

**இருளன்** : கொன்ற உடலை என்ன செய்வது?

**கருப்பன்** : உடலைச் சாதாரணத் துணிகளால் சுற்றிச் சுடுகாட்டிலே போட்டு விடுவோம். பிணம் மன்னர் மகனுடையது என்று கூட யாருக்கும் தெரியாது.

**இருளன்** : வா கருப்பா... காரியத்தை வேகமாகச் செய்து விடலாம். இல்லாவிட்டால் ஆபத்து...

**கருப்பன்** : வா போகலாம்.

– காட்சி முடிவு –

# காட்சி 19

**இடம் : சுடுகாடு**

**நேரம் : இரவு**

**உறுப்பினர்கள் : சந்திரமதி, வாரணாசியின் காவலர்கள் சூரன், மாறன்**

(சுடுகாட்டில் இருண்டப் பகுதியிலிருந்து குரல்)

**மாறன்** : பெண்ணே... இந்த நேரத்தில் இங்கே என்ன செய்கிறாய்? கொஞ்சம் வெளிச்சத்திற்கு வா...

(மேடைக்கு நடுவே உள்ள வெளிச்ச வட்டத்துள் இருவரும் வருதல். மற்றொரு வீரன் பிணத்தைப் பார்ப்பது போன்றுச் செய்கை செய்தல்)

**சூரன்** : மாறா... இந்தப் பெண் பார்த்துக் கொண்டிருந்தப் பிணம், நம் இளவரசருடையது.

**மாறன்** : என்ன சொல்கிறாய் சூரா... இரண்டு நாட்களாக இளவரசரைக் காணாமல் தேடிக் கொண்டல்லவா இருக்கிறோம்!

**சூரன்** : மாறா... நிச்சயமாகப் பிணம் இளவரசருடையதா?

**மாறன்** : அப்படியென்றால் விஷயத்தை மன்னரிடம் சென்றுச் சொல். நான் இந்தப் பெண்ணை விசாரிக்கிறேன்.

**சூரன்** : மாறா... இதோ அரசரிடம் சென்றுச் சொல்லுகிறேன்.

**மாறன்** : பெண்ணே... என்ன காரியம் செய்தாய்? எங்கள் இளவரசரைக் கொல்லக் காரணம்...

**சந்திரமதி** : ஐயா... என் மகன் பாம்புக் கடித்து இறந்து விட்டான். அவன் பிணத்தை எரிக்க வந்தேன். எரிக்கப் பணம் இல்லாததால், வெட்டியான் பிணத்தைத் தூக்கி எறிந்து விட்டார். என் மகன் பிணத்தைத் தேடி வந்தேன். இது என் மகனின் பிணம் தான்.

**மாறன்** : பெண்ணே... பொய் சொல்லதே... உன்னைப் பார்த்தால் சாதாரணப் பெண்ணாகத் தெரிகிறாய். நகைகளுக்காகத் தானே இளவரசனைக் கொன்றாய்?

**சந்திரமதி** : ஐயா... நான் சொல்வதெல்லாம் உண்மை. தயவு செய்து என்னை நம்புங்கள்.

**மாறன்** : பிணத்துடன் கையும், களவுமாக மாட்டிக் கொண்டதால் கதை சொல்கிறாய். உன் கதையை யாரும் நம்ப மாட்டார்கள்.

**சந்திரமதி** : ஐயா... தயவு செய்து என்னை நம்புங்கள்.

(சூரன் வேகமாக வருதல்)

**சூரன்** : மாறா... விஷயத்தை மன்னரிடம் சொன்னேன்.

**மாறன்** : மன்னர் என்ன சொன்னார்?

**சூரன்** : பிணத்துடன் பிடிபட்டவர் யாராக இருந்தாலும், அவரை இந்தச் சுடுகாட்டிலேயே சிரச்சேதம் செய்ய உத்தர விட்டார்.

**மாறன்** : விசாரிக்க வேண்டாமா?

**சூரன்** : விசாரணைக்கு அவசியமில்லை என்று சொல்லி விட்டார். இளவரசனைக் கொன்றவர்க்கு மன்னிப்பும் கிடையாதாம். விசாரணையும் கிடையாதாம். இளவரசரின் உடலை எடுத்துச் செல்ல மன்னரே வருகிறார். அவர் வரும் முன்னர் தண்டனையை நிறைவேற்றச் சொன்னார்.

**மாறன்** : பெண்ணே... அரசர் உத்தரவு... வா சிரச்சேதம் செய்யும் இடத்திற்கு...

(அனைவரும் செல்லுதல்)

– காட்சி முடிவு –

# காட்சி 20



**இடம் : சிரச்சேதம் செய்யுமிடம்.**

**நேரம் : இரவு**

**உறுப்பினர்கள் : சூரன், மாறன், ஹரிச்சந்திரன், சந்திரமதி, ஸ்வாமித்திரர், வசிஷ்டர், வீரபாகு, பிராமணன், இந்திரன், லோகிதன்**

**விசுவாமித்திரர்:** இங்கே என்ன நடக்கிறது?

**சூரன்** : ஐயா... இந்தப் பெண் இளவரசனைக் கொன்று விட்டாள். அவளைச் சிரச்சேதம் செய்ய அரசரின் ஆணை.

**ஹரிச்சந்திரன்** : பெண்ணை இந்த மேடை மீது தலை வைக்கச் சொல்லுங்கள்.

**மாறன்** : பெண்ணே... உன்னைக் கொல்லும் முன்பு, கடைசியாக இறைவனை வேண்டிக் கொள்.

**சந்திரமதி** : நன்றி ஐயா... இறைவா... தயவு செய்து என் கடைசி வேண்டுதலுக்குச் செவிச் சாய்க்க வேண்டும். முதலில் எங்கள் குரு வசிஷ்டருக்கு என் வணக்கங்கள். இறைவா... என் கணவர் உண்மைக்காகப் பல கஷ்டங்கள் பட்டிருக்கிறார். அவரதுப் பெருமை உலகம் உள்ள வரைக்கும், இந்தச் சூரியன் சந்திரன் இருக்கும் வரைக்கும் நிலைக்க வேண்டும். என்னுடைய மகன் லோகிதன் உயிருடன் எழ வேண்டும். எங்கள் நாட்டின் அரசர் விசுவாமித்திரர் நீடூழி வாழட்டும் ஐயா... இப்போது என்னைக் கொல்லலாம் (பலி பீடத்தில் தலை வைத்தல்)

**ஹரிச்சந்திரன் :** (குரல்) கடவுளே... இதென்ன விளையாட்டு? இறந்த மகனின் பிணத்தை எரிக்க வந்த அதே பெண். என் மகன் இறந்து விட்டான். இப்போது என் மனைவியையும் கொல்ல வேண்டிய நிலை. இவை நான் முன் ஜன்மத்தில் செய்த பாவத்தின் பலனோ? இப்போது நான் என் கடமையைச் செய்ய வேண்டும். மனமே அமைதியுடன் காரியத்தைக் கவனி. இன்னும் என்னவெல்லாம் செய்யப் போகிறேனோ?

(சந்திரமதியைக் கொல்ல கைகளை ஓங்குதல், விசுவாமித்திரரின் வருகை)

**விசுவாமித்திரர்:** ஹரிச்சந்திரா... கொஞ்சம் பொறு... நீ என் பெண்களை மணந்து கொண்டால்... உன் கஷ்டங்களைப் போக்குகிறேன். உன் மகன் உயிருடன் எழுவான். உன் மனைவியையும் சிரச்சேதத்திலிருந்துக் காப்பாற்றுகிறேன். உன் நாட்டையும் திருப்பித் தந்து விடுகிறேன்.

**ஹரிச்சந்திரன் :** மாமுனியே! தாங்களா? நான் இதுவரைப் பட்டக் கஷ்டங்கள் என் முன் ஜன்ம வினைப்பயன் என்று எண்ணிக் கொண்டு இருந்தேன். நீங்கள் என்னைக் கஷ்டப்படுத்திச் சோதிப்பதின் காரணம் என்ன? உங்களுடைய இந்த வேண்டுகோளை இப்போதும் என்னால் ஏற்க முடியாது. என் மனைவிக்குச் செய்துத் தந்த ஏகபத்தினி விரதச் சத்தியத்தை என்னால் மீற முடியாது. என் மகனின் இறப்பைக் கண்டு விட்டேன். இப்போது என் மனைவியையும் கொல்லப் போகிறேன். என்னுடைய வாழ்க்கை உண்மைக்காக. அதற்கு என்ன விலைத் தர வேண்டுமென்றாலும் நான் தரத் தயார். எனக்கு ஆசி கூறுங்கள்.

(பெண்ணின் தலையைப் பலி பீடத்தில் வைத்து வெட்டப் போதல்)

**விசுவாமித்திரர்:** போதும் ஹரிச்சந்திரா... நிறுத்து. நீ வென்று விட்டாய்.

(வசிஷ்டர், வீரபாகு, பிராமணன், இந்திரன் வருகை)

**விசுவாமித்திரர்:** ஆம்... உன் உண்மைக்கு முன்னால் என் ஆணவம் தோற்று விட்டது. வசிஷ்டருக்கு உன் மீது இருந்த நம்பிக்கை பொய்யாகவில்லை.

**வசிஷ்டர் :** ஹரிச்சந்திரா... எனக்கு உன் மேலிருந்த நம்பிக்கையை உறுதிபடுத்தி விட்டாய்.

**இந்திரன் :** விசுவாமித்திர மாமுனியே... போட்டியில் வசிஷ்டர் வெற்றிப் பெற்று விட்டார். போட்டியில் தோற்ற நீங்கள்...

**விசுவாமித்திரர்:** ஆம் இந்திரா... போட்டியில் தோற்று விட்டேன். உண்மைக்கு முன்னால் தானே தோற்றேன். அதற்குப் பெருமைப் படுகிறேன்.

**இந்திரன் :** அப்படியென்றால் உண்மைக்கான விலையைத் தர வேண்டியது தானே...

**விசுவாமித்திரர்:** ஆம் தர வேண்டும். ஹரிச்சந்திரா... நீ பட்டக் கஷ்டங்களுக்கும், உன் உண்மைக்கு விலையாக... நீர், நிலம் உள்ள வரைக்கும் நிலையான பெயரைப் பெறுவாய். நான் தவமிருந்துப் பெற்றப் பேற்றில், புண்ணியத்தில் பாதியை உனக்குத் தருகிறேன். உன் மகன் உயிருடன் எழுந்து வருவான்.

(லோகிதன் வருதல்)

**இந்திரன்** : எப்படியோ... போட்டி நல்லபடியாக முடிந்தது.



**விசுவாமித்திரர்:** ஆம். போட்டியில் எனக்கு உதவிய (பிராமணனை நோக்கி) பிராமணராக வந்த அக்னி பகவானுக்கும், (வீர பாகுவை நோக்கி) சுடுகாட்டுத் தலைவனாக வந்த எமதர்மனுக்கும் என் நன்றி. உன் புகழ் நீடுழி வாழ்க!

**ஹரிச்சந்திரன்** (விசுவாமித்திரரை வணங்கி, சந்திரமதியை எழச் செய்து விட்டு) நன்றி மாமுனியே... உண்மை வழி நடப்பவர்க்கு என் வாழ்க்கை ஒரு எடுத்துக்காட்டு. சோதனைகள் பல வந்த போதிலும், அதைக் கடந்து வரும்போது கிடைக்கும் புகழ் அழிவில்லாதது. ஆம்! உண்மையின் விலை அழிவில்லாத புகழ் என்பதைப் புரிந்து கொண்டு விட்டேன். இனியும் என் சத்திய விரதத்தைத் தொடர்வேன்.

(ஹரிச்சந்திரனும், சந்திரமதியும் விசுவாமித்திரரை வணங்குதல். அனைவரும் ஆசீர்வதித்தல்)

– காட்சி முடிவு –